Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் - 346

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN



Editor:

*Mahamahimopadhyaya*

P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM–631503.

வருஷச் சந்தா 10 ரூ. ஜீவியச் சந்தா ரூ. 25

Released by Maran's Dog ,Toronto, Canada

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



...பெருமாள் திருவடிகளே சரணம்.



ஆழ் வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ் வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ப வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

Released by Maran's Dog ,Toronto, Canada

நள ௵ 10-4-1977

# ஸ்ரீ ராமாநுஜன்—346



ஆசிரியர்:

மஹாமஹோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியர்

| புடம் 29 | நளஹ பங்குனி மாதம்<br>ஏப்ரல், 1977 | ஸஞ்சிகை 10 |
| --- | --- | --- |


## ங்களவாண்டின் மங்களச்செய்திகள்

எம்பெருமானுடைய திருவவதாரவருஷமான பிங்களவாண்டு திருவவ ரித்துவிட்டது. இதை யுத்தேசித்து இதுவரையில் நாம் செய்துவந்த மங்கலச் சயல்கள் ஏகதேசமென்னும்படி இனிமேல் நடைபெறவேண்டியவைகளே அபரி தமாகவுள்ளன. பலபல விடங்களில், நாம் எதிர்பார்த்ததற்கு மேலாகவே மங்கலச் சய்திகள் ஓங்கி வளர்கின்றனவென்றறிந்து மிகமிக மகிழ்கிறோம். நமக்குத் தரிந்தவரையில் எம்பெருமானார் தர்சனஸ்தர்கள் வாழுமிடங்களிலெங்கும் (அதா து நாற்றிசையிலும்) அவரவர்கள் உத்ஸாஹம் பொங்கிப் பணி செய்து வருவதை றிகின்றோம் நமது தென்னாட்டில் திவ்யதேசங்களிலெங்கும் [கோயில் திருமலை பெருமாள் கோயில்களில்மட்டுமன்றிக்கே ஒவ்வொரு திவ்ய தேசத்திலும்] எம் பெருமானாருடைய மஹோத்ஸவத்தைச் சீரும் சிறப்புமாக நடத்த திட்டமிட்டிருக் கிறார்கள். 15—4—77வெள்ளிக்கிழமை முதலாக 24—4—77 ஞாயிற்றுக்கிழமை வரையில் ஸ்வாமியின் மஹோத்ஸவமென்பதை உலகமறியும். திருவவதாரஸ்தல மான ஸ்ரீபெரும்பூதூரில் நடைபெறும் முறை வாசாமகோசரமாகக் காண்கிறது. அது பக்தபாகவதோத்தமர்கள் நேரில் அநுபவித்தே அறியக் கூடியதாம்.

ஆங்காங்கு உத்ஸவத்தைச் சிறப்புற நடத்தி யநுபவிப்பதென்பது நிற்க. எங்குமுள்ளவர்கள் நீண்டகாலம் அநுபவிக்கும் படியாக, ஸ்வாமியின் ஸ்ரீஸூக்தி களையும் ஸ்ரீஸூக்திகளின் விளக்கங்களையும், மற்றும் ஸ்வாமி திருவுள்ளத்திற்கு உகப்பான நூல்களையும் வெளியிடுவதென்பதை நாம் முக்கியமாகக் கருதுகிறோம். ஸ்ரீமதுபயவே. புத்தூர் ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சந பத்ராதிப ஸ்வாமிகளின் பல் வகை முயற்சிகள் போற்றத்தக்கன. இவ்விதழில் இணைக்கப்பட்டுள்ள அந்த ஸ்வாமியின் விளம்பரமொன்று அன்பர்களால் குறிக்கொள்ளத்தக்கது. அதில்

கண்டபடி அந்த மங்கலச் செய்திகளில் அவரவர்கள் சக்திக்கிணங்க ஈடுபடவேண்டுமென்பதை நாமும் உகந்து தெரிவித்துக்கொள்ளுகிறோம். அது தவிர சென்ற விதழில் நாம் தெரிவித்திருந்தபடி தொள்ளாயிரத்தறுபத்தொரு லக்கங்கள் கொண்ட பல்வகை விஷயங்கள் நிரம்பியதொரு மலரை ஸ்ரீராமாநுஜ பக்த ஹஸ்த பூஷணம் என்னும் பெயரால் நாம் அச்சிட்டு முடித்திருக்கிறோம். இதை ஆனிமாதத் திருவாதிரையில் வெளியிடுவதாக முன்னம் தெரிவித்திருந்தோம். பல அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்க நாளது சித்திரையில் செய்ய திருவாதிரை தன்னிலேயே வெளியிட நிச்சயித்து ஸித்தப்படுத்தி யிருக்கின்றோம்.

20—3—77 தேதியன்று சென்னை வீனஸ் காலனியில் முன்னாள் நீதிபதி உயர்திரு. N. கிருஷ்ணஸாமி ரெட்டியாருடைய தலைமையில் ஒரு மாபெருங் கூட்டம் கூடிற்று. அது பீங்களவாண்டின் மங்களச் செய்திகளில் தலைமைபெற்று விளங்கிற்று. இனிமேல் நிகழும் செய்திகளைப் பற்றியும், ஸ்ரீபெரும்பூதூர் மஹோத்ஸவ வரலாறுகளைப்பற்றியும் அடுத்த இதழில் விளக்கமாக வெளியிடுவோம்.

# பொன் மேனி

(ஸ்ரீமதுபயவே. D. Ramaswamy Iyengar, Advocate)

உபநிஷத்துக்களிலும் திவ்யப்ரபந்தங்களிலும் எம்பெருமானுடைய திருமேனி ஸ்வர்ண வர்ணமுடையதாகச் சில இடங்களில் வர்ணிக்கப்பட்டிருப்பதைக் காணலாம் ஒரு உபநிஷத்து 'பொன்போன்ற மீசையும்,பொன்போன்ற கேசமும் நக நுனி வரையில் முழுதும் பொன்மேனி' யெனப் பேசுகிறது. ஆழ்வார்களும் 'பொன்னிவர்மேனி' யென்றும், 'சுட்டுரைத்த நன்பொன் உன் திருமேனி யொளி யொவ்வாது' எனறும் பொன்மேனியுடையராகப் பெருமாளைப் போற்றுகிறார்கள். வேறு பல இடங்களிலோ நீர்வண்ணன், முகில்வண்ணன், மழைவண்ணன், கார்வண்ணம், நீலமேனி, 'பச்சைமாமலைபோல்மேனி' 'கருமுகில்போல்வதோர்மேனி' 'கருமாணிக்கமலை' என்று ச்யாமளவர்ணமென்றே பல்வேறு பெயர்களாலும் உவமைகளாலும் உத்கோஷிக்கப்படுகிறது. இப்படி பரஸ்பர விரோதம் தோன்றும் இருவகையான வர்ணவர்ணனையில் எப்படி இரண்டும் உண்மையாகும் என்று யோசிக்கப்புக்கால் பெருமாளுக்கு ஏற்பட்டிருக்கும் பிராட்டியினுடைய நித்ய யோகத்தால்தான் என்று பெருமாளை நேரில் ஸாக்ஷாத்கரித்த ஸ்ரீ பேயாழ்வார் காட்டிக்கொடுத்திருக்கிறார்.

"திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்..........ன் ஆழிவண்ணன்பால் இன்று" என்கிற பாசுரத்தால் பெருமாளுடைய திருமேனியின் வர்ணம் கடல்போன்ற கருமையாயினும் உருக்கிவார்த்த தங்கத்தை அதிசயிக்கும் சோபையையுடைய திருவின் சேர்த்தியால் பொன்மேனியாகக் காண்கிறதென்கிறார். ஆழிவண்ணன் மேனியைப் பொன் மேனியாகக் கண்டவர் அதற்குக் காரணம் கூறுபவராய் 'திருக்கண்டேன்' என்கிறார்போலும். ஸ்வாமி தேசிகனும் 'தத்தே சோபாம் ஹரிமரதகே தாவகீ மூர்த்தி:' என்று ஸ்ரீஸ்துதியில் பிராட்டியைநோக்கி 'தேவரீர் திருமேனி பெருமானுடையமரகதம்போன்றதிருமேனிக்கு சோபையை யளிக்கிறது' என்று அருளிச்செய்கிறார். பெருமாளாகிற நீலமான மரகதத்தில் பிராட்டியி

னுடைய காந்திபட்டு ப்ரதிபலிப்பதால் ஏற்படும் சோபையே அம்மேனியைப் பொன்மேனியாகக் காட்டுகிறது.

பரதேவதா நிஷ்கர்ஷத்தை வர்ணங்கள் மூலமாய் ஓரிடத்தில் திருமங்கை மன்னன் செய்யும்போது 'ஒருருவம் பொன்னுருவம் ஒன்று செந்தீ, ஒன்று மாகட லுருவம், ஒத்துநின்ற மூவுருவும் கண்டபோது ஒன்றும் சோதி, முகிலுருவம் எம் மடிகள் உருவந்தானே' என்று சிவனுக்கும் பிரமனுக்கும் அந்தர்யாமியான பர தேவதையின் வர்ணம் முகிலுருவம் என்றே முடிவு செய்கிறார். அவ்வாழ்வாரே எம்பெருமானை அநுபவிக்கும்போது 'பொனனிவர்மேனி, மரதகத்தின் பொங்கி ளம்சோதி' என்று ஸ்வர்ணம் கலந்த மரதகச் சாயையை மனத்துக்கொண்டு இன்புறுகிறார்.

உபாய தசையிலும், உபேய தசையிலும் ஒன்றைவிட்டு ஒன்று பிரியாத ஒரு மிதுனமே நமக்கு உத்தேச்யமாகையால் அந்த மிதுனத்தில் மின்னும் சோபையே ஸ்வர்ண சோபை. நெடுமாலின் திருமேனி நீலம். ஆனால் திருமாவின் திருமேனி ஸ்வர்ணம் கார்மேகம் நாற்புறமும் சூழ்ந்து ஒரே இருளாய் வந்துற்றபோது ஒரு மின்னல் கொடி படர்ந்து அம் மேகமண்டலத்தை எல்லாம் சுடருடையதாய்ச் செய்யுமாப்போல, எம்பெருமானாகிய நீலமேகத்தை யணைந்த மின்னாகிய பிராட்டியும் அவனை நமக்குக் காட்டிக்கொடுக்கிறாள். அவளருளின்றேல் அவனரு ளிலது. பிராட்டியினுடைய கடாக்ஷத்தால்தான் அவன் நமக்கு வெளிப்பட்டு நம் கண்களுக்கு விஷயமாகவேண்டும், இது பரம் முதலிய பஞ்சரூபங்களுக்கும் பொதுவான உண்மை.

பிராட்டி சேர்த்தி நித்யமாகையால் பெருமாளுடைய கருமைமாறி எப்போ தும் பொன்னிற முடையவனாகவே ஸேவை ஸாதிக்கவேண்டுமே மறுபடி ச்யாமள னாய் அவனிருப்பதற்கு அவகாசமேது? என்று எழும் சங்கையை வெகு அழகாய்ப் பரிஹரிக்கிறார் நம் கவிஞர் பெருமான். "போகைச்வர்ய ப்ரிய ஸஹகாரை: காபி லக்ஷ்மீ கடாக்ஷை:—பூய ச்யாமா மலர்மகளுடைய மைதீட்டிய கண்களிலிருந்து வெளிப்படும் கடாக்ஷங்களால் மறுபடியும் கருமை தோற்றுகிறதாம் திருமால் திரு மேனியில். லக்ஷ்மீ நேத்ரோத்பல ஸ்ரீ ஸதத பரிசயாதேஷ ஸம்வர்த்தமாந:...... கலயது வபுஷ: காளிமா கைடபாரே:" என்கிற தத்வ முக்தாகலாப மங்கள ச்லோ கத்திலும் பிராட்டியின் கடாக்ஷ பரம்பரைகளால் ஏற்பட்ட பெருமான் திருமேனி யின் கருமை தமக்கு அகில ஸம்பத்தையும் அளிக்கவேண்டுமென்று வேண்டுகிறார். பெருமாள் விஷயத்தில் தேஹாத்மவாதம் செய்து திவ்யமங்கள விக்ரஹத்தை திவ்யாத்ம ஸ்வரூபத்துக்கு மேற்பட்டதாகக் கொண்டாடும் மனோவ்ருத்தி நிற்க, இங்கே அந்தத் திருமேனியின் வர்ணமொன்றே மிக்க க்ஷேமங்களை அளிக்கவல்ல தாக அருளிச்செய்யப்பட்டிருக்கிறதை கவனிக்க வேண்டும். பெருமானுடைய ஸ்வயமான கருமைக்கு அந்த ஸம்பத் ப்ரதான சக்தி உண்டோ, இல்லையோ, பெரிய பிராட்டியாருடைய அஞ்சன விழிகளின் அழகிய காந்திகளுக்கு எம்பெரு மான் விஷயமாகி அதனால் ஏற்பட்ட கருமைக்கு அந்த சக்தி உண்டு என்பதில் சிறிதளவும் ஐயமில்லை.

—தி. ராமஸ்வாமி தாஸன். 20—3—77.

## திருவல்லிக்கேணி உடையவர் கைங்கர்ய ஸபையின் ஆதரவில் 20—3—77 ஞாயிறு பிற்பகலில் சென்னை வீனஸ் காலனியில் நடந்த மகாநாட்டின் செய்திச் சுருக்கம்

(A ராமாநுஜாசாரி B.A., 60 பெருமாள் கோயில் தெரு, சென்னை-15)

ஸ்ரீராமாநுஜருடைய 961வது திருநக்ஷத்திரத்தையொட்டி நடைபெற்ற இம்மாபெருங்கூட்டத்தில் முன்னாள் நீதிபதி. உயர் திரு. N.கிருஷ்ணசாமி ரெட்டியாரவர்கள் தலைமை தாங்கிப் பேசியதாவது— ஸமீபித்துள்ள பிங்கள வாண்டு ஸ்ரீராமாநுஜர் திருவவதரித்த வருஷமாகும், இன்னும் நாற்பது வருஷத்தில் ஆயிரமாண்டு பூர்த்தியாகப்போகிறது. ஸ்ரீராமாநுஜன் பத்திரிகையில் ஸ்ரீ அண்ணங்கராச்சாரியர் ஸ்வாமிகள் வற்புறுத்தி வருவதுபோல் இந்த பிங்கள வருஷ திருவவதாரோத்ஸவத்தைச்சிறப்புடன் கொண்டாடவேண்டியது ஒவ்வொரு ஹிந்துவுக்கும். (முக்கியமாக) ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவனுக்கும் கடமையாகும், எம்பெருமானாருடைய திவ்ய சரிதம் நாமெல்லாம் எப்படி வாழவேண்டும், என்பதை அறிய வழிகாட்டியாய் இருக்கிறது. அவருடைய வாழ்க்கை வரலாற்றையும் தத்துவத்தையும் எ[illegible] நடையில் எல்லா பாஷைகளிலும் வெளியிடுவதோடு, நாடகம், தெருக்கூத்து, உபந்யாஸம் இவைகள் மூலமும் ஒவ்வொரு ஊரிலும் பிரசாரம் செய்யவேணும், எதிர்காலப் பிரஜைகளான குழந்தைகளை மறக்காமல் அவர்களின் நன்மையையொட்டி இராமாநுச வைபவத்தை பட ரூபத்தில் வெளியிட வேண்டும்.

"திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தசாரதிப் பெருமானே உடையவராகத் திருவவதரித்தார்" என்பது சம்பிரதாயம். இதையொட்டி அவர் ஸன்னிதியில் கோயில் கொண்டிருக்கும் உடையவருக்கு சித்திரையில் விசேஷ ரீதியில் உத்ஸவம் கொண்டாட திட்டமிட்டிருக்கிறது. நம்முடைய சிரத்தையைக் காட்ட எம்பெருமானாருக்கு சில திருவாபரணங்களும் சமர்ப்பிப்பதாக உத்தேச்யம் இக்கைங்கர்யத்தில் நாம் எல்லோரும் பொருளுதவி செய்து ஆசாரியன் கிருபைக்குப் பாத்திரமாவோமாக.' இப்படி ஸ்ரீ கிருஷ்ணசாமி ரெட்டியார் பேசினர். பிறகு, உயர்நீதிபதி. ஸ்ரீவேதுராமய்யரவர்கள் 'பக்திமார்க்கத்திற்கு தந்தையான ஸ்ரீராமாநுஜர் நாமெல்லாம் உஜ்ஜீவிக்க பிரபத்தியென்னும் சுலபமான வழியைக் காட்டியுள்ளார்; இச்சரித்ர பூர்வமான பம்பவத்தில் நாமெல்லாம்......ஸ்ரீவைஷ்ணவர்களும் மற்றவர்களும... ...பங்கெடுத்துக்கொள்ளுவது நமது பாக்கியமாகும். ஒரு விதத்தில் எல்லோரும் வைஷ்ணவர்களே என்றார். பிறகு டாக்டர் P. நாகராஜராவ் அவர்கள், தான் எழுதிய "Sri Ramanuja's Philosophy" என்ற ஆங்கில புத்தகத்தை வெளியிட்டு சபையோருக்கு இலவச விநியோகம் செய்த பிறகு விசிஷ்டாத்வைத தத்துவத்தை ஆங்கிலத்தில் விளக்கினர். ஸ்ரீ P. B அண்ணங்கராச்சாரியர் ராமாநுஜர் உபய வேதாந்தாசாரியர் என்ற விருதை முதன் முதலாகப்பெற்ற விதத்தைப்பற்றி விளக்கினர். "பாஷ்யகாரர் இதுகொண்டு ஸூத்ரவாக்யங்களொருங்கவிடுவர்" என்ற ஆசார்யஹ்ருதய சூர்ணையையும், அதற்கும் மூலமான முதலியாண்டானுடைய ச்லோகமொன்றையும் விளக்கினர்.

ஸ்ரீமான்களான உத்தமூர் வீரராகவாசார் ஸ்வாமி, [illegible]ளுக்குடி K. வரதாச்சார் ஸ்வாமி, பேச்சாளர் பிரும்மஸ்ரீகீரன் அவர்கள், ஸ்ரீமான் பிள்ளைலோகம் பாஷ்யகார் ஸ்வாமி, ஸ்ரீமதிப்ரேமா பாண்டுரங்கம், பேராசிரியர்கள் பரசுராமன், ஜகந்நாதாசாரியர், மணவாள அய்யங்கார் இவர்களுடைய சொற்பொழிவுக்குப் பிறகு மகாநாடு இனிது கலைந்தது. நித்யஸ்ரீர் நித்யமங்களம். ... ★

| | |
|---|---|
| வல் வினையேன் மனத்தில் ஈனம் கடிந்த இராமாநுசன் | மஹாபாபியான எனது ஹ்ருதயத்திலிருந்த கல்மஷங்களைப் போக்கடித்த எம்பெருமானார் |
| தன்னை எய்தினர்க்கு | தம்மைப் பற்றினவர்களுக்கு |
| அத்தானம் கொடுப்பது | அந்த மோக்ஷ ஸ்தானத்தை அளிப்பது |
| | (எவ்விதமாக வென்றால்) |
| தன் தகவு என்னும் சரண் கொடுத்து | தம்முடைய க்ருபையாகிற ஸ்தானத்தை (அவர்களுக்குக் கைம்முதலாகக்) கொடுத்து. [தமது திவ்ய க்ருபையாலே] |

* * *—அடியார்களுக்கு மோக்ஷமளிக்கிற அதிகாரம் எம்பெருமானுக்குமுண்டு, எம்பெருமானார்க்குமுண்டு. எம்பெருமான் அளிப்பது மிகவும் ச்ரமப்படுத்தியே; எம்பெருமானார் அளிப்பது கேவலம் தம்முடைய திருவருளாலே என்கிறார் இதில்.

ஞானமானது நன்றாகக் கனிந்து அது பக்தி, பரமபக்தி, பரமபக்தி என்னும்படியான அவஸ்தைகளையடைந்து, அதனால் இந்த ஸம்ஸாரத்தில் க்ஷணகாலமிருப்பதும் அஸஹ்யமாய் ஆழ்வார்களைப்போல 'ஒரு பகலாயிரமூழியாலோ' என்று துடிப்பவர்களுக்குத்தான் எம்பெருமான் முக்தியளிப்பது; எம்பெருமானாரோ வென்னில் * க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யராகையாலே அடியார்களிடத்தில் எவ்விதமான க்லேசத்தையும் எதிர்பாராமல் தமது திருவருளைக்கொண்டே அவர்களைக்கரையேற்றுவர் என்றதாயிற்று.

இப்பாட்டை விநோதமாக உபந்யஸிக்கலாம்; அதாவது,—மோக்ஷமென்கிற ஒரு சரக்கு எம்பெருமானாகிற கடையிலும் எம்பெருமானாராகிற கடையிலும் கிடைக்கக்கூடியது. உலகில் கடைகளுக்கு மூன்றுவிதமான அஸௌகரியங்கள் இருக்கக்கூடும். அவையாவன—சரக்கின் விலையை அபாரமாகச் சொல்லுதல் ஒன்று; அந்த விலையில் சிறிது குறைக்கும்படி நாம் கேட்க இடமில்லாதபடி கறார்விலை என்று கட்டளைப்படுத்துவது ஒன்று; அதிக விலையும் கறார் விலையுமாயிருந்தாலும் இருக்கட்டும்; தற்காலம் கடனாகக் கொடுத்தால் நாலு நாள் பொறுத்து விலைகொடுத்து விடுவோமென்றால் அதற்கும் இசையாமல் 'இன்றைக்கு ரொக்கம் நாளைக்கு கடன்' என்பது ஒன்று. ஆக இப்படிப்பட்ட மூவகையான அஸௌகரியங்கள் அமைந்த கடையை ஒப்பன் எம்பெருமான்; ஏனெனில் மோக்ஷமாகிற சரக்குக்கு விலையை அபாரமாக விதித்துவைத்தான்; ஞானங்கனிந்த நலங்கொண்டு நாடொறும் நையவேண்டுமென்கையாலே இந்த விலையை எல்லாரும் செலுத்த முடியாதாகையால் விலை அதிகம். இதில் சிறிது குறைத்துக் கொள்வோமென்றால் இசைகிறானில்லை; நாடொறும் நைபவர்க்கே வானங்கொடுப்பேனென்கிறான்; இப்படிப்பட்ட நிலைமை இவ்விருள் தருமாஞாலத்தில் உண்டாவது அருமை, முன்னடி எங்களை மோக்ஷத்திற்கு அனுப்பிவிடு; அவ்விடத்திற்போய் இந்த விலையைச் செலுத்திவிடுகிறோமென்று கடன் வேண்டினால், 'இந்தக் கடையில் கடன் கட்டியில்லை; இங்கேயிருந்து ஞானங்கனிந்த நலங்கொண்டு நாடொறும் நைபவர்களைத்தான் மோக்ஷத்துக்கு அனுப்புவேன்' என்கிறான். ஆகையாலே மூன்று வகை அஸௌகரியங்கள் நிறைந்த கடையாம் எம்பெருமான். எம்பெருமானாராகிற கடையில் எவ்வகையான அஸௌகரியமுமில்லை; மோக்ஷமென்னும் சரக்குக்கு அவர் விலை விதிப்பதேயில்லையாகையால், அதிக விலை யென்றாவது கறார்விலை யென்றாவது கைவிலை யென்றாவது சொல்லக்கூடிய கஷ்டங்களுக்கு ப்ரஸக்தியே இல்லை; ஆகையாலே, மோக்ஷம் விரும்புகின்றவர்களே! நீங்கள் எம்பெருமானைப் பணிந்து வருந்தாமல் எம்பெருமானாரைப் பணிந்து ஸுகப்படுங்கள்—என்று இப்பாட்டால் உபதேசித்தாராயிற்று.

வல்வினையேன் மனத்தில் ஈனங்கடிந்த என்பதற்கு—மாதவனை அடிபணிந்து வருந்து
5 கையாகிற ஈனத்தை எனக்குத் தவிர்ந்த எம்பெருமானார் என்று உரைக்கவுமாம்.

**சரணமடைந்த தருமனுக்கா* பண்டுநூற்றுவரை மரணமடைவித்தமாயவன்* தன்னை வணங்கவைத்த கரணமிவையுமக்கன்றென் றிராமாநுச னுயிர்கட்கு அரணங்கமைத்திலனேல்* அரணார்மற்றிவ் வாருயிர்க்கே. 67**

| | | | |
|---|---|---|---|
| சரணம் அடைந்த தருமனுக்கு ஆ | தன்னைச் சரணம் பற்றின தர்ம புத்ரருக்காக | உமக்கு அன்று | உங்களுக்கு உரிமைப்பட்டவையல்ல ; |
| பண்டு | முற்காலத்திலே | என்று | இவ்வாறாக உபதேசித்து |
| நூற்றுவரை | துரியோதனன் முதலிய நூறுபேர்களை | இராமாநுசன் | எம்பெருமானார் |
| மரணம் அடைவித்த மாயவன் | சாகும்படி செய்த எம்பெருமான் | உயிர்கட்கு | ஆத்மாக்களுக்கு |
| தன்னை வணங்க வைத்த கரணம் இவை | தன்னை வழிபடுவதற்காகவே ஏற்படுத்தி வைத்த இந்திரியங்களாம் இவை ; | அரண் அமைத்திலன் ஏல் | ரக்ஷையைக் கற்பித்திலராகில் |
| | | இ ஆர் உயிர்க்கு | இந்த அருமையான ஆத்மாக்களுக்கு |
| | | மற்று அரண் ஆர் | வேறு ரக்ஷகராவார் ஆர்? (ஆருமில்லை.) |

***—தன்னைச் சரணமடைந்த தர்மபுத்திரர்க்காகப் படாப்பாடுகள்பட்டு துரியோதநாதிகளான நூற்றுவரைப் பாரதப்போரில் முடித்தருளின எம்பெருமான் செவி வாய் கண் மூக்கு முதலிய இந்திரியங்களையும் அவற்றுக்கு இருப்பிடமான உடலையும் உங்களுக்குத் தந்தருளினது, தன்னை வழிபட்டு உஜ்ஜீவிப்பதற்காக வேயன்றி உங்கள் மனம்போனபடி விஷயாந்தரங்களை அநுபவிப்பதற்காக வல்ல என்கிற இவ்வர்த்தத்தை எம்பெருமானார் திருவுளந்தரித்து எல்லார்க்கும் உபதேசிக்கவே நாமெல்லாம் உஜ்ஜீவிக்கலாயிற்று; அவர் இப்படி உபதேசித்திராவிட்டால் நமக்கு என்ன கதி! வேறு யார் நம்மைத் திருத்தவல்லவர்?—என்றுராயிற்று.

**தருமனுக்கா** என்று தர்மபுத்திரரை மாத்திரஞ் சொன்னது பஞ்சபாண்டவர்கட்கும் பாஞ்சாலிக்கும் உபலக்ஷணமென்க. **தன்னை வணங்கவைத்த கரணமிவை** என்றவிடத்து ''ஜிஹ்வே! கீர்த்தய கேசவம் முராரிம்'' என்ற முகுந்தமாலை ச்லோகத்தை யோஜித்துக்கொள்வது பெரிய திருமொழியில் **நீணகஞ்சுற்றி** என்கிற திருமொழியையும் கூட்டிக்கொள்வது. **கரணம்**—வடசொல்; இந்திரியம் ... 67

**ஆரெனக்கின்று நிகர்சொல்லில்* மாயனன்றைவர்தெய்வத் தேரினில்செப்பிய கீதையின்செம்மை* பொருள்தெரியப் பாரினில்சொன்ன விராமாநுசனைப் பணியும்நல்லோர் சீரினில்சென்றுபணிந்தது*என்னாவியும் சிந்தையுமே**

| | | | |
|---|---|---|---|
| மாயன் | ஆச்சர்ய சேஷ்டிதங்களையுடைய எம்பெருமான் | சொன்ன | (கீதா பாஷ்ய முகத்தாலே) அருளிச்செய்த |
| அன்று | முற்காலத்தில் | இராமாநுசனை | எம்பெருமானாரை |
| ஐவர் | பஞ்சபாண்டவர்களுடைய | பணியும் | ஆச்ரயித்திருக்கிற |
| தெய்வம் தேரினில் | தெய்வத்தன்மைபொருந்திய தேரின்மீது (இருந்துகொண்டு) | நல்லோர் | விலக்ஷண புருஷர்களுடைய |
| | | சீரினில் | கல்யாண குணங்களிலே |
| | | என் ஆவியும் சிந்தையும் | எனது ஆத்மாவும் மநஸ்ஸூம் |
| செப்பிய | அருளிச்செய்த | | |
| கீதையின் | பகவத் கீதையினுடைய | சென்று பணிந்தது | சென்று சேர்ந்து விட்டன ; |
| செம்மை பொருள் | ஸ்வரஸமான அர்த்தத்தை | சொல்லில் | சொல்லுமளவில் |
| தெரிய | (அனைவரும் எளிதாகத்) தெரிந்து கொள்ளும்படி | இன்று | இக்காலத்தில் |
| | | எனக்கு ஆர் நிகர் | எனக்கு ஆர் ஒப்பாவார்? |
| பாரினில் | இப்பூமியிலே | | |

***—எம்பெருமான் அன்றொருகால் பார்த்தஸாரதியாயிருந்துகொண்டு அவனுக்கு உபதேசித்த கீதையின் பொருளை ஸ்பஷ்டமாக அனைவரும் தெரிந்து

கொள்ளும்படி ஸ்ரீகீதாபாஷ்யமருளிச்செய்த எம்பெருமானாரை யாவர் ஆச்ரயித்திருக்கிறார்களோ, அந்த மஹான்களுடைய திருக்குணங்களிலேயே என்னுடைய ஸகல இந்திரியங்களும் அவகாஹித்துவிட்டன; எம்பெருமானைப் பணிவதற்கே இசையாத இவ்வுலகில் ததாஸதாஸர்களைப் பணியும்படியான பரிபாகம்பெற்ற எனக்காரும் நிகரில்லை என்றாராயிற்று.

**மாயன்** = ஸர்வேச்வரனை தான் அர்ஜுநனுக்குத் தேர்ப்பாகனாய்த் தாழ நின்ற ஆச்சரியன். **தெய்வத்தேர்** = அர்ஜுநனுடைய தேர் பெரிய திருவடியின் அம்சமாதல் அறிக. **செம்மைப் பொருள்** = ருஜுவான அர்த்தம். ... 68

**சிந்தையினோடு கரணங்கள்யாவும் சிதைந்து* முன்னாள் அந்தமுற்றாழ்ந்தது கண்டு* அவையென்றனக் கன்றருளால்**
**தந்தவரங்கனும் தன்சரண்தந்திலன் தானதுதந்து* எந்தையிராமாநுசன் வந்தெடுத்தனனின்றென்னையே.**

| | | | |
|---|---|---|---|
| முன் நாள் | ஸ்ருஷ்டிக்கு முற்காலத்தில் | அருளால் தந்த அரங்கனும் | க்ருபையாலே உண்டாக்கின எம்பெருமானும் |
| சிந்தையினோடு கரணங்கள் யாவும் சிதைந்து | சிந்தையும் இந்திரியங்களுமெல்லாம் அழிந்து | தன் சரண் தந்திலன் | தனது திருவடிகளைக் காட்டிக் கொடுத்து உஜ்ஜீவிப்பிக்கவில்லை |
| அந்தம் உற்று ஆழ்ந்தது கண்டு | உபஸம்ஹாரத்தை யடைந்து அசேதந ப்ராயமாயிருப்பதைப் பார்த்து | | (அக்குறை நீங்க) |
| | | எந்தை இராமாநுசன் | ஸ்வாமி எம்பெருமானார் |
| என் தனக்கு | (அப்படி அசேதந ப்ராயராய்க் கிடந்தவர்களில் ஒருவனை) எனக்கு | தான் வந்து | தாமாகவே வந்து |
| | | அது தந்து | அந்தத் திருவடிகளை தந்தருளி |
| அவை | அந்த கரணகளேபரங்களை | இன்று என்னை எடுத்தனன் | இன்று என்னை ஸம்ஸாரத்தில் நின்றும் உத்தரிப்பித்தார். |
| அன்று | அக்காலத்தில் | | |

* * *—பிரளயகாலத்தில் ஸகல ஆத்துமாக்களும் இறகொடிந்த பக்ஷி போலே கரணகளேபரங்களை இழந்து வருந்தும் நிலைமையிலே எம்பெருமான் பரமகாருணிகனாகிக் கரணகளேபரங்களைக் கொடுத்தருள்கின்றான் என்கிற நூற்கொள்கையின்படி — அடியேனும் கரணகளேபரசூந்யனாய் வருந்திக்கிடந்த காலத்துத் திருவுள்ளமிரங்கி அவற்றைக்கொடுத்து உதவின எம்பெருமான் இவ்வுலகில் என்னை ஒரு மநுஷ்யனாக ஸ்ருஷ்டித்து விட்டானே யொழியத் தனது திருவடிகளை எனக்குக் காட்டிக் கொடுத்து உஜ்ஜீவிக்கச் செய்யவில்லை; அக்குறைதீர எம்பெருமானார் என்னை உஜ்ஜீவிப்பித்தார் என்கிறார். **அந்தம்**—வடசொல்; நாசம். ... 69

**என்னையும் பார்த்தென்னியல்வையும்பார்த்து* எண்ணில்பல்குணத்த**
**உன்னையும்பார்க்கில் அருள்செய்வதேநலம்* அன்றியென்பால்**
**பின்னையும்பார்க்கில் நலமுளதேயுன் பெருங்கருணை**
**தன்னையென்பார்ப்பர்* இராமாநுசா உன்னைச் சார்ந்தவரே.** 70

| | | | |
|---|---|---|---|
| இராமாநுசா | எம்பெருமானாரே! | எண் இல் பல் குணத்த உன்னையும் பார்க்கில் | எண்ணிறந்த பல திருக்குணங்களையுடைய தேவரீரையும் நோக்குமளவில் |
| என்னையும் பார்த்து | (ஒரு குணமுமில்லாமல் குற்றமே நிறைந்திருக்கிற) என்னையும் நோக்கி | அருள் செய்வதே நலம் | (இப்போது போல எப்போதும்) அருள் செய்திருப்பதே நல்லது; |
| என் இயல்வையும் பார்த்து | (இனிமேலும் எவ்வித நன்மையும் ஸம்பாதித்துக் கொள்ள முடியாமலிருக்கிற) என்னுடைய தன்மையையும் நோக்கி | அன்றி | இதுவொழிய |
| | | பின்னையும் பார்க்கில் | மேலும் ஆராயுமளவில் |

| | | | |
|---|---|---|---|
| என்பால் நலம் உளதே | என்னிடத்தில் ஏதாவது நன்மையுண்டோ? (சிறிதும் இல்லை) | உன்னை சார்ந்தவர் | தேவரீரை ஆச்ரயித்தவர்கள் |
| (நன்மையொன்று மில்லாவிடில் நம் அருள் செய்யலாகாதென்று திருவுள்ளம் பற்றினுல்) | | உன் பெரு கருணை தன்னை என் பார்ப்பர் | தேவரீருடைய கிருபையைப் பற்றி என்ன நினைப்பர்கள் (இளப்பமாக நினைப்பார்களோ) |

***—ஸ்வாமிந்! அடியேனுடைய நிலைமை எப்படிப்பட்டதென்றால், ஸம்ஸாரஸம்பந்திகளான விஷயாந்தரங்களையே நச்சி உழல்பவன் நான்; தேவரீருடைய நிலைமை எப்படிப்பட்டதென்றால் அடியவர்களுடைய குற்றங்களையும் நற்றமாகக் கொண்டு அங்கீகரிப்பவர் தேவரீர். ஆகவிப்படி இருவருடைய நிலைமையையும் நோக்குமளவில், தேவரீருடைய நிர்ஹேதுக க்ருபைக்கு அடியேனைப் பாத்திரமாக்குவதே தகுதி. இப்போது என்மீது நிர்ஹேதுக க்ருபைபண்ணி அங்கீகரித்திருப்பது போலவே இனிமேலும் ஒரு நாளும் கைவிடாமல் காத்தருளவேணும். 'உன்னை நான் கைப்பற்றியிருப்பதற்கு உன்னிடத்தில் என்ன நன்மை இருக்கிறது?' என்று தேவரீர் விமர்சிக்கக் கூடாது; என்னிடத்தில் ஒரு நன்மையும் கிடையாது. அப்படி நன்மையைக் கண்டே ரக்ஷிக்க வேணுமென்று நிர்ப்பந்தம் வைத்துக் கொண்டால் தேவரீருடைய திருக்குணங்களுக்கு உபயோகமேயில்லாமற் போய் விடும். ''இவ்வளவுதானு எம்பெருமானுருடைய குணங்கள்'' என்று தேவரீருடைய அடியவர்கள் குறைவாக நினைக்க நேர்ந்துவிடும். ஆகையாலே என்பக்கல் எவ் விதமான நன்மையையும் எதிர்பாராமல் தேவரீருடைய நிர்ஹேதுக க்ருபையையே பற்றுசாகக் கொண்டு இதுவரையிலும்போல் என்றைக்கும் காத்தருளவேணு மென்றுராயிற்று. ... ... ... ... ... 70

சார்ந்ததென்சிந்தை யுன்தாளிணைக்கீழ்* அன்புதான்மிகவும்
கூர்ந்ததத் தாமரைத்தாள்களுக்கு* உன்தன் குணங்களுக்கே
தீர்ந்ததென்செய்கை முன்செய்வினைநீ செய்வினையதனுல்
பேர்ந்தது* வண்மை யிராமாநுசா! எம்பெருந்தகையே. 71

| | | | |
|---|---|---|---|
| வண்மை | ஔதார்யமுடையரும் | மிகவும் கூர்ந்தது | மிகவும் அதிகரித்தது |
| எம் | எமக்கு ஸ்வாமியும் | என் செய்கை | எனது செயலும் |
| பெரு தகை | பெருந்தன்மையுடையருமான | உன் தன் குணங்களுக்கே தீர்ந்தது | தேவரீருடைய திருக்குணங்களுக்கேஅற்றுத் தீர்ந்தது, |
| இராமாநுசா | எம்பெருமானுரே! | முன் செய் வினை | முன்னே செய்த பாவங்களெல்லாம் |
| என் சிந்தை | எனது நெஞ்சு | நீ செய் வினை அதனுல் பேர்ந்தது | தேவரீர் செய்தருளின (கடாக்ஷமாகிற) காரியத்திலே தொலைந்து போயின. |
| உன் தாள் இணை கீழ் சார்ந்தது | தேவரீருடைய உபயபாதங்களின் கீழ் அமர்ந்து விட்டது; | | |
| அன்புதான் | பக்தியும் | | |
| அத் தாமரை தாள்களுக்கு | அந்தத் திருவடி தாமரைகள் விஷயத்திலேயே | | |

***—கீழ்ப்பாட்டில் இவர் தாம் பிரார்த்தித்ததற்கு எம்பெருமானுர் இசைந் தாற்போலிருக்கக்கண்டு, ஸந்தோஷாதிசயத்தாலே தாம்பெற்ற பேறுகளைப் பேசுகிருர் இதில்.—ஸ்வாமிந்! என்னுடைய ஜ்ஞாநபக்திகள் தேவரீர் திருவடிகளில் ஊன்றி நின்றன; என்னுடைய கரணங்கள் தேவரீருடைய திருக்குணங்களில் ஈடுபட்டுக் கைங்கரியம் பண்ணத்தொடங்கின. தேவரீருடைய கடாக்ஷமாத்ரத் தாலே என்னுடைய பூர்வஸஞ்சித பாபங்களெல்லாம் பறந்துபோயின. இத்தனையும் தேவரீருடைய திருவருளின் பலன் என்றுராயிற்று. ... ... 71

கைத்தனன்தீய சமயக்கலகரை* காசினிக்கே
உய்த்தனன்தூய மறைநெறிதன்னை* என்றுன்னியுள்ளம்
நெய்த்தவன்போ டிருந்தேத்தும் நிறைபுகழோருடனே
வைத்தனனென்னை* இராமாநுசன்மிக்க வண்மைசெய்தே. 72

| | | | |
|---|---|---|---|
| இராமாநுசன் | எம்பெருமானார் | என்று உன்னி | என்று அநுஸந்தித்து |
| மிக்க வண்மை செய்து | தமது ஔதார்ய குணத்தை அதிகமாகக் காட்டி, | உள்ளம் நெய்த்து | நெஞ்சு கனிந்து |
| தீய சமயம் கலகரை | துஷ்ட மதங்களிலிருந்து கொண்டு கலஹஞ்செய்கிறவர்களை | அவ்வன்போடு இருந்து | அந்த ப்ரீதியோடே கூடியிருந்து |
| கைத்தனன் | ஒழித்துவிட்டார்; | ஏத்தும் | (அவரை) ஸ்தோத்ரம் பண்ணுகிற |
| தூய | பரிசுத்தமான | நிறை புகழோருடனே | புகழ் நிறைந்த மஹான்களோடே |
| மறை நெறி தன்னை | வேதமார்க்கத்தை | என்னை வைத்தனன் | (என்னையும் ஒருவனாக எண்ணும்படி) என்னை வைத்தருளினார். |
| காசினிக்கு உய்த்தனன் | பூமியிலே ஸ்தாபித்தருளினார்; | | |

***—கீழ்ப்பாட்டில், தாம் பெற்ற சில பேறுகளைப் பேசினார்; அவற்றுள் முக்கியமான ஒரு பேற்றைத் தனிப்படப் பேசுகிறார் இதில்.

“ஸ்வாமி, துஷ்டமதஸ்தர்களை யெல்லாம் தொலைத்து வேத மார்க்கத்தைப் ப்ரதிஷ்டாபநஞ் செய்தருளினார்” என்று இந்த வைபவத்திலே யீடுபட்டு நெஞ்சு கனிந்திருக்கின்ற மஹான்களோடே என்னையும் ஒருவனாக எண்ணலாம்படி ஒரு பொருளாக்கி வைத்தார் எம்பெருமானார்; இப்படியும் ஒரு ஔதார்ய முண்டோ? என்று உருகுகின்றார். **நிறைபுகழோருடனே வைத்தனன்**—அஸத்துக்களோடே பழகிக் கிடந்த என்னை ஸத்துக்களோடே கூட்டிவைத்தார் என்னவுமாம். ... 72

**வண்மையினாலும் தன்மாதகவாலும்* மதிபுரையும்**
**தண்மையினாலு மித்தாரணியோர்கட்கு* தான்சரணாய்**
**உண்மைநன்ஞான முரைத்தவிராமா நுசனையுன்னும்**
**திண்மையல்லாலெனக்கில்லை* மற்றோர் நிலை தேர்ந்திடிலே.** 73

| | | | |
|---|---|---|---|
| தன் வண்மையினாலும் | தம்முடைய ஔதார்ய குணத்தாலும் | உண்மை நல் ஞானம் உரைத்த இராமாநுசனை | யதார்த்தமாய் விலக்ஷணமான ஞானத்தை உபதேசிக்கிற எம்பெருமானாரை |
| மா தகவாலும் | பரமக்ருபையாலும் | | |
| மதி புரையும் தண்மையினாலும் | சந்திரனையொத்த திருவுளக் குளிர்ச்சியாலும் | உன்னும் திண்மை அல்லால் | சிந்திப்பதாகிற அத்யவஸாயமொன்று தவிர |
| இ தாரணியோர்கட்கு | இப் பூமியிலுள்ளவர்களுக்கு | தேர்ந்திடில் | ஆராயுமளவில் |
| தான் சரண் ஆய் | தாமே ரக்ஷகராய்க்கொண்டு | எனக்கு மற்று ஓர் நிலை இல்லை | அடியேனுக்கு வேறொரு அத்யவஸாயமில்லை. |

***—தம்முடைய அத்யவஸாயத்தின் உறைப்பை உரைக்கிறார் இதில். எம்பெருமானாரை இடைவிடாது சிந்திப்பதே நன்று என்று கொண்டிருக்கையாகிற அத்யவஸாயந் தவிர வேறு எந்த அத்யவஸாயமும் எனக்கில்லையென்கிறார். மற்றபேர்களைவிட்டு எம்பெருமானாரையே சிந்திப்பதற்கு யாதுகாரணமென்னில்;—பொருளின் சீர்மைபாராமல் உபதேசிப்பதற்கு உறுப்பான ஔதார்ய குணத்தாலும், பிறருடைய துர்க்கதியைக்கண்டு பொறுக்கமாட்டாத பரமக்ருபையாலும், குளிர்ந்த திருவுள்ள முடைமையாலும் ஒருவருடைய அபேக்ஷையில்லாமல் தாமாகவே ரக்ஷகராகி யதார்த்தமான விலக்ஷண ஞானத்தை உபதேசிப்பவர் அவ்வெம்பெருமானாரொருவரேயன்றோ; ஆகையால் அவர் தம்மையே சிந்திப்பதென்கிற உறுதி எனக்கு உண்டாயிற்று. ... ... ... 73

தேரார்மறையின் திறமென்று*மாயவன் தீயவரைக்கூராழிகொண்டு குறைப்பது*கொண்டலனையவண்மை
ஏரார்குணத்தெம் மிராமாநுசனவ்வெழில்மறையில் சேராதவரைச்சிதைப்பது* அப்போதொரு
சிந்தைசெய்தே. 74

| | | | |
|---|---|---|---|
| மறையின் திறம் தேரார் என்று | (இப்பாவிகள்) வேதஞ்சொல்லுகிற வழியை நிரூபித்தறிகிறதில்லை யென்று | ஏர் ஆர் குணத்து | (மற்றும்பல) நல்ல குணங்களுடையவருமான |
| தீயவரை | பாவிகளை | எம் இராமாநுசன் | ஸ்வாமி எம்பெருமானார் |
| மாயவன் | எம்பெருமான் | அ எழில் மறையில் சேராதவரை சிதைப்பது | அந்த சிறந்த வேதத்தில் அந்வயியாதவர்களை பங்கப்படுத்துவது (எப்படியென்றால்) |
| குறைப்பது | தண்டிப்பது | | |
| கூர் ஆழி கொண்டு | கூர்மையான தனது திருவாழியாலே: | | |
| கொண்டல் அனைய வண்மை | மேகம்போன்ற ஔதார்யகுணமுடையவரும் | அப்போது ஒரு சிந்தை செய்து | அப்போதைப்போது ஒவ்வொரு யுக்தியைக்கொண்டாம் |

***—எம்பெருமான் தனது ஆஜ்ஞாரூபமான வேதங்களின் கட்டளைப்படி நடவாத கொடியவர்களைத் தனது திருவாழியைக் கொண்டு த்வம்ஸம்பண்ணி விடுவன்; எம்பெருமானாரோவென்னில் அவ்வளவு ஆயாஸம் எடுத்துக்கொள்வதில்லை; வேதங்களை அடியோடு ஒப்புக்கொள்ளாத பாஹ்யர்களையும், வேதங்களைப் பிரமாணமாக ஒப்புக்கொண்டு அவற்றில் அபார்த்தங்களைப் பண்ணுகிற குத்ருஷ்டிகளையும் வாதப்போரில் அப்போதைப்போது திருவுள்ளத்தில் ஸ்புரிக்கின்ற நல்ல யுக்திகளைக்கொண்டு கண்டித்து விடுவர்.

...இதனால், துஷ்டர்களை நிரஸிக்கும் வகையில் எம்பெருமானாருடைய சாதுரியம் ஒப்பற்றதென்று சொல்லிற்றாயிற்று. ... ... ... 74



செய்த்தலைச்சங்கம் செழுமுத்தமீனும்* திருவரங்கர்
கைத்தலத்தாழியும் சங்கமுமேந்தி* நங்கண்முகப்பே
மொய்த்தலைத்துன்னை விடேனென்றிருக்கிலும் நின்புகழே
மொய்த்தலைக்கும்வந்து* இராமாநுசாவென்னை முற்றுநின்றே. 75

| | | | |
|---|---|---|---|
| செய் தலை | வயல்களில் | மொய்த்து | வந்து நெருங்கி |
| சங்கம் | சங்குகளானவை | அலைத்து | புத்தியைக் கெடுத்து |
| செழு முத்தம் | அழகிய முத்துக்களை | உன்னை விடேன் என்று இருக்கிலும் | 'உன்னை விடமாட்டேன்' என்று இருந்தாலும் |
| ஈனும் திரு அரங்கர் | உண்டாக்குமிடமான திருவரங்கமாநகரில் எழுந்தருளியிருக்கும் பெருமாள் | இராமாநுசா | எம்பெருமானாரே! |
| | | நின் புகழே | தேவரீருடைய திவ்ய குணங்களே |
| கை தலத்து | தமது திருக்கையிலே | | |
| ஆழியும் சங்கமும் ஏந்தி | திருவாழி திருச்சங்குகளைத் தரித்துக்கொண்டு | என்னை வந்து முற்றும் மொய்த்து நின்று | என் பக்கல் வந்து சூழ்ந்து கொண்டு |
| நம் கண் முகப்பே | நமது கண்ணெதிரில் | அலைக்கும் | ஆகர்ஷிக்கின்றன. |

***—எம்பெருமான் தனது விலக்ஷணமான அழகைக் காட்டிக் கொண்டு வந்து என் கண்ணெதிரே நின்றாலும், என்னை விடாதே வலியப்பற்றினாலும் அவனது அழகில் நான் மோஹிக்கப் பெறுவதில்லை; தேவரீருடைய திருக்குணங்களே என்னை ஈடுபடுத்துகின்றன; பகவத் குணங்களுக்கு நான் ஈடுபடுவதில்லையென்கிறார்.

"செய்த்தலைச்சங்கம் செழுமுத்தமீனும்" என்கிற விசேஷணம்—திருவரங்கர் என்பதன் பகுதியாகிய திருவரங்கத்தில் அந்வயிக்கும். திருவரங்கம் எப்படிப்பட்டதென்றால், முத்துக்களை யுதிர்க்கும் சங்குகள் நிறைந்த வயல்சூழ்ந்தது என்றவாறு.

ஈனுதல்—பிரஸவித்தல். எம்பெருமானாரிடத்தில்* தேவுமற்றறியாத பத்திப்பெருங் காதல் தமக்கு உள்ளமை இப்பாட்டில் சொல்லப்பட்டதென்க. ... 75

நின்றவண் கீர்த்தியும் நீள்புனலும்* நிறைவேங்கடப்பொற்
குன்றமும் வைகுந்தநாடும் குலவிய பாற்கடலும்*
உன்றனக் கெத்தனை யின்பந்தரு முன்னிணைமலர்த்தாள்
என்றனக்குமது* இராமாநுச இவை யீந்தருளே. 76

| | | | |
|---|---|---|---|
| இராமாநுசா | எம்பெருமானாரே!, | உன் தனக்கு | தேவரீருக்கு |
| நின்ற வண் கீர்த்தியும் நீள் புனலும் நிறை | நிலைநின்ற பெரும் புகழும் அதிகமான நீர்ப் பெருக்கும் நிறைந்துள்ள | எத்தனை இன்பம் தரும் | எவ்வளவு ஆனந்தத்தை விளைக்குமோ |
| வேங்கடம் பொன் குன்றமும் | திருவேங்கட மென்னும் அழகிய திருமலையும் | உன் இணை மலர் தாள் | தேவரீருடைய உபய பாதாரவிந்தங்கள் |
| வைகுந்தம் நாடும் | ஸ்ரீ வைகுண்டமாகிய திருநாடும் | என் தனக்கும் அது | எனக்கும் அவ்வளவு ஆநந்தத்தை யுண்டாக்கும்; |
| குலவிய பால் கடலும் | கொண்டாடத்தக்க திருப் பாற் கடலும் | இவை | இப்படிப்பட்ட திருவடிகளை |
| | | ஈந்தருள் | அடியேனுக்குத் தந்தருள வேணும். |

***—கீழ்ப்பாட்டில் அமுதனார் விளக்கிய பரமபக்தியை அறிந்த எம்பெருமானார் மிகவும் உகந்தருளி 'இவர்க்கு நாம் எதைச் செய்வோம்' என்றிருப்பதாகக் கண்ட அமுதனார், ஸ்வாமிந்! அடியேனுக்கு தேவரீர் வேறொன்றும் செய்தருள வேண்டா; அடியேனுக்கு ஸர்வஸ்வமாகிய இந்தத் திருவடித்தாமரைகளைத் தந்தருளவேண்டுமத்தனை யென்கிறார்.

"நின்றவண் கீர்த்தியும் நீள்புனலும்நிறை" என்னுமளவும் திருவேங்கடத்துக்கு விசேஷணம். பாவங்களைப் போக்கவல்லதென்று நிலைநின்றபுகழ்பெற்றதும் *தெழிகுரலருவிகளையுடையதுமான திருமலையென்ன, பரமபதமென்ன, திருப்பாற்கடலென்ன, ஆகிய இந்த ஸ்தலங்களெல்லாம் ஸ்வாமிந்! தேவரீருக்கு எப்படிப்பட்ட ஆநந்தத்தை விளைக்குமோ அப்படிப்பட்ட ஆநந்தத்தை அடியேனுக்கு தேவரீருடைய திருவடிகள் விளைக்கும். "தெழிகுரலருவித் திருவேங்கடத்து எழில்கொள் சோதி எந்தை தந்தை தந்தைக்கு—ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம்" என்று நம்மாழ்வார் பாரித்தாற் போலத் திருமலையப்பனுக்குக் கைங்கரியம் பண்ணவேணுமென்று அடியேன் விரும்பவில்லை; நம்மாழ்வாருகந்த விஷயமென்று தேவரீர் உகந்திருக்கலாம். "மாகவைகுந்தங் காண்பதற்கு என் மனமேக மெண்ணு மிராப்பகலின்றியே" என்று ஆழ்வார் விரும்பின திருநாட்டிலும் அடியேனுக்கு விருப்பமில்லை. அதையும் ஆழ்வாருகந்த திருநாடென்று தேவரீர் உகந்திருக்கலாம். "பொங்கிய பாற்கடல் பள்ளிகொள்வானைப் புணர்வதோராசையினால், என்கொங்கை கிளர்ந்து குமைத்துக் குதுகலித்து ஆவியை ஆகுலஞ்செய்யு மங்குயிலே!" என்று ஆண்டாள் விரும்பினாற் போலத் திருப்பாற்கடல்நாதனோடு அணையவேணுமென்கிற விருப்பமும் அடியேனுக்கில்லை; அதனையும் நம் நங்கை உகந்த விஷயமென்று தேவரீர் உகந்திருக்கலாம்; உண்மையில் அடியேன் உகந்த விஷயம் எதுவென்றால் "எம்பெருமானார் திருவடிகளே சரணம்" என்பதொன்றேயாம். ஆனபின்பு அடியேனுக்கு இத்திருவடிகளையே சேமவைப்பாகத் தந்தருளவேணுமென்று பிரார்த்தித்தாராயிற்று. 76

ஈந்தனனீயாதவின்னருள்* எண்ணில்மறைக்குறும்பைப்
பாய்ந்தனனம்மறைப்பல்பொருளால்* இப்படியனைத்தும்
ஏய்ந்தனன் கீர்த்தியினா லென்வினைகளை வேர்பறியக்
காய்ந்தனன்* வண்மை யிராமாநுசற்கென் கருத்தினியே. 77

| | | | |
|---|---|---|---|
| ஈயாத | (இதற்கு முன்பு ஒருவர்க்கும்) அருளாத | இ படி அனைத்தும் ஏய்ந்தனன் | இப்பூமியெங்கும் வியாபித்தவரும் |
| இன் அருள் | விலக்ஷணமான க்ருபையை | என் வினைகளை | எனது கருமங்களை |
| ஈந்தனன் | அடியேனுக்குச் செய்தருளினவரும், | வேர் பறிய காய்ந்தனன் | வேரோடே அறும்படி போக்கினவரும் |
| எண் இல் மறை குறும்பை | எண்ணிறந்த வேத விரோதி மதங்களை | வண்மை | ஔதார்யமே வடிவுகொண்டவருமான |
| அ மறை பல் பொருளால் பாய்ந்தனன் | அந்த வேதங்களின் அர்த்தங்களையே கொண்டு கண்டித்தவரும், | இராமாநுசற்கு | எம்பெருமானாருக்கு |
| கீர்த்தியினால் | தமது கீர்த்தியாலே | இனி என் கருத்து | இன்னமும் (செய்யத் தக்கதாகத்) திருவுள்ளத்தில் ஏதேனுமுண்டோ? |

* * *—கீழ்ப்பாட்டில் தாம் அபேக்ஷித்தபடியே திருவருளைத் தந்தருளப்பெற்று, க்ருதக்ருத்யராய், அவர் செய்தருளின உபகாரங்களை அநுஸந்தித்து, இவையெல்லாம் செய்தபின்பு இன்னமும் செய்தருள்வதாகத் திருவுள்ளம்பற்றியிருப்பது எதுவோ? என்கிறார்.

எம்பெருமானார் என்னுடையபாவங்களையெல்லாம்வேரோடே பறித்தெறிந்து தம்முடைய பரமகிருபைக்கு என்னைப் பாத்திரமாக்கி யருளினார். இவ்வகையாலே எனக்குமாத்திரம் உபகாரம் செய்தாரல்லர்: வேதங்களுக்குப் புறமதத்தவர்கள் சொல்லும் அபார்த்தங்களை உண்மைப் பொருள்களாலே கண்டித்து எல்லாரையும் உஜ்ஜீவிப்பித்தாரென்கிற புகழ் உலகமெங்கும் பரவப் பெற்றார். ஆனபின்பு இனிமேல் அவர் செய்யத்தக்கது ஒன்றுமில்லை. இல்லையாயினும் அவர் திருவுள்ளத்தை நோக்குமிடத்து, மேன்மேலும் ஏதோ நன்மைகளைச்செய்து போரப் பாரித்திருப்பதாகவே காண்கிறது; இன்னும் என்னசெய்யப்போகிறாரோ தெரியவில்லையென்கிறார். **மறைக்குறும்பாவது**-வேதத்திற்கு மாறாகச்சொல்லும் தப்புப்பொருள்கள். **ஈந்தனன், பாய்ந்தனன், ஏய்ந்தனன், காய்ந்தனன்** என்பவற்றை வினைமுற்றாகவே கொண்டு உரைத்தலுமாம். ... ... ... ... ... 77

**கருத்தில்புகுந்துள்ளில்கள்ளங்கழற்றி* கருதரிய**
**வருத்தத்தினால் மிகவஞ்சித்து* நீயிந்தமண்ணகத்தே**
**திருத்தித்திருமகள் கேள்வனுக்காக்கியபின் என்னெஞ்சில்**
**பொருந்தப்படாது* எம்மிராமாநுச! மற்றோர் பொய்ப்பொருளே.** 78

| | | | |
|---|---|---|---|
| எம் இராமாநுச நீ | எம்பெருமானாரே!, தேவரீர் | இந்த மண் அகத்தே | இந்த லோகத்திலே |
| கருத அரிய வருத்தத்தினால் மிக வஞ்சித்து | நெஞ்சால் நினைக்க முடியாத பரிச்ரமங்கள் பட்டு என்னை நன்றாக ஏமாற்றி | திரு மகள் கேள்வனுக்கு ஆக்கிய பின் | திருமாலுக்கு ஆளாம்படி பண்ணின பின்பு |
| கருத்தில் புகுந்து | (எனது) நெஞ்சிலே வந்து புகுந்து | மற்று ஓர் பொய் பொருள் | (இதற்கு மாறான) வேறு எந்த தப்பு விஷயமும் |
| உள்ளில் கள்ளம் கழற்றி | உள்ளேயிருந்த ஆத்மாபஹார தோஷத்தைப் போக்கி | என் நெஞ்சில் | என் மனத்தில் |
| திருத்தி | சிக்ஷித்து | பொருந்தப் படாது | பொருந்தமாட்டாது. |

* * *—எம்பெருமானார் தம்மைத் திருத்துகைக்காகப் பட்டபாடுகளை எடுத்துச் சொல்லி, இப்படி என்னைத் திருத்தி தேவரீருக்கு உத்தேச்யமான விஷயத்திலே ஆட்படுத்தினபின்பு இனி வேறு எந்த விஷயமும் என்னெஞ்சுக்கு இசையமாட்டாதென்கிறார்.

